[13th November 1961

(*a*) whether there is any proposal to construct a Tourist Home in Tiruchendur; and

(*b*) If so, when?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*All-India Council of Technical Education (Southern Regional Committee)*

*** 2032 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) அண்மையில் சென்னையில் கூடிய தொழில் நுட்பக் கல்வியின் அகில இந்தியக் கவுன்சிலின் தென் பிராந்திய கமிட்டி நிறைவேற்றிய முக்கிய தீர்மானங்கள் என்ன?

(இ) அவை பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) & (இ) A statement[a] is placed on the table of the House.

**SRI S. M. ANNAMALAI :** இங்கே செய்திருக்கிற சிபாரிசுகளில் இண்டர்வ்யூ மார்க் 15 சதவீதமாக இருக்கவேண்டும் என்பது ஒன்று. நம் மாநிலத்தில் 275 மார்க்குகளில் 75 மார்க் இண்டர்வ்யூவிற்கு என்று வைக்கப்பட்டிருக்கிறது. இதைக் குறைக்க முடியாது என்று சொல்லப்பட்டதே இதற்குக் காரணம் என்ன என்று தெரிவிப்பார்களா?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** 75 மார்க் வைத்திருக்கும் முறை நடைபெறுவதில் எந்தவித குறையும் இல்லை. அதோடு தேர்ந்தெடுப்பதில் தரம் குறைந்திருப்பதாகவும் தெரியவில்லை. இருப்பதை மாற்றவேண்டுமென்று சொன்னால் காரணம் சொல்லவேண்டியிருக்கிறது. இருப்பதில் குறை இல்லை அதனால் மாற்ற வேண்டியதில்லை என்று நினைக்கிறோம்.

SRI K. VINAYAKAM : While awarding marks for the suitability of the candidate, much discretion is allowed to the members of the Committee and anything could be made up out of these 75 marks. So, would the Government consider the feasibility of reducing the range of marks so as to make it a foolproof system so far as selection is concerned?

THE HON. SRI C. SUBRAMANIAM : There can be no foolproof system or 'nail-proof' system. We have to depend upon the *bona fides* of the members of the Committee. My assessment of the work of the Committee in the last three or four years is that it has worked fairly well and it will be dangerous also to mainly depend upon the marks obtained in the examinations also. We know what methods are adopted to get marks for the purpose of getting admissions into the various technical educational institutions also. Therefore, an objective test is also necessary for

---

[a] Printed as Appendix 1 on pages 455–456 infra.

the Selection Committee. It is all a matter of balancing the two requirements. My own view is that it has worked fairly well Perhaps a review of it may be made at the appropriate time and if necessary a change may be introduced at that time.

SRI S. NAGARAJA MONIGAR: If it is said that the 75 marks are too much and it should be reduced because the allotting of those marks are at the discretion of the members of the Selection Committee, does it mean that we have no confidence in those members that they will not utilise it properly? 9-00 a.m.

THE HON. SRI C. SUBRAMANIAM: That is what I just now answered. It has been working fairly well. There have been no charges that it has been utilised by the Committee for the purpose of favouritism or for any undesirable purpose.

*New University*

*2033 *Q.*—SRI A. A. RASHEED (on behalf of Sri M. KALYANASUNDARAM): Will the Hon. the Minister for Finance be pleased to state the present stage of the proposal to open a Third University in Madras State?

THE HON. SRI C. SUBRAMANIAM: There is a proposal to start a University at Madurai. The question of starting a 'Rural University' at Coimbatore is also under consideration.

SRI A. A. RASHEED: May I know the estimated cost of opening such University in Madurai?

THE HON. SRI C. SUBRAMANIAM: I am sorry I do not have the figures with me now.

**SRI N. K. PALANISAMI:** *ஸார் இதற்கு வேண்டிய கிராண்டை மத்திய சர்க்காரிடம் இந்த சர்க்கார் கேட்கவில்லை என்று பார்லிமெண்டிலே சொல்லப்பட்டது. அதற்குப் பிறகு என்ன நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதை அமைச்சர் அவர்கள் சொல்ல முடியுமா?*

**THE HON. SRI C. SUBRAMANIAM:** *அதிலே இது முதலிலே அண்டர் கன்சிடரேஷனிலே இருந்தது. அதன்படி முடிவு எடுத்த பிறகுதான் உதவி கேட்கவேண்டும். இன்னொரு சர்வகலா சாலை ஏற்படுத்துவதா, வேண்டாமா என்பதை முடிவு செய்வதற்காக நாம் சென்னை சர்வகலாசாலையினரை கலந்தாலோசிக்க வேண்டியிருந்தது. அவர்கள் அப்படி ஆலோசனை செய்து பார்த்ததிலே, மதுரைக்கு இன்னொரு சர்வகலாசாலை வேண்டாமென்று கருத்து தெரிவித்திருக்கிறார்கள். இதைப்பற்றி இன்னும் சர்க்கார் முடிவு செய்யவில்லை.*

**SRI V. K. KOTHANDARAMAN:** *ஸார், சர்வகலாசாலை என்பதற்கும், ரூரல் யூனிவர்சிடி என்பதற்கும் என்ன வித்தியாசம் என்பதை விளக்க முடியுமா?*